உ

# திருவேணுவனச்சந்திவிநாயகர், சிரலைவாயச்சேய், சனீஸ்வரன், பேரில்

# அன்பின்வழிபாக்கள்,




திருநெல்வேலி

வாசிக்கமீண்டவிநாயகர்தெரு

பென்ஷன் சப்ரிஜிஸ்தரார்

**R. S. சுப்பிரமணியபிள்ளை** B, A.

அவர்களால்



ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸில் அச்சியற்றப்பெற்றன.

# பிழை திருத்தம்

---

| பக்கம் | பாட்டு | வரி | இதற்காக | இது |
|---|---|---|---|---|
| I | 7 | 1 | ல் | ம் |
| 3 | 2 | 4 | நிச்சயமாய்நீ யுரைத்து | நிச்சயமாய் நீயுரைத்து |
| 5 | 3 | 4 | ஞ | ஹ |
| 7 | 4 | 11 | ச்சதாங்கம் | த்தசாங்கம் |
| 6 | 1 | 4 | ே | ெ |

உ

சிவமயம்.

# திருச்செந்தூர்க்கலிவிருத்தம்.



செந்திரு வேற் றுகஞ்
செந்திற் குகற் றொழ
எந்தைதுங் கரன் றன்
சிந்தைசெய் மனனே.

செந்திலின் மேவிய
கந்தசுவா மியா
மெந்தை யடி யிணை
சிந்தை செய்ம் மினே. [1]

சிந்தனை செய்ய நம்
செந்தினில் மேவிய
தந்தையி னாருன்
விந்தை யாய் வருமே [2]

ஆறுவா கனர் பின்
னூக வர் தவனை
மோதிப் பவர் தன்
சோகம தறு மே. [3]

கடம்ப மாலை யினி
னிடமமர்ந் தாமெஞ்
சுரும்பின மா யவன்
சோதி சூழ் மனனே. [4]

ஒன்றி நினைத் திட
யென்று முதவிடு
மன்றல்கூர் செந்தி னில்
நின்றவ னருளே. [5]

குக னெனக் கூறி
யக மெலாங் குளிரச்
செக மதற் செகறல்
நகருறை வோமே; [6]

காலையு மாலையுங்
வேலவன் கழல் சொல
ஞாலமும் போற்றிடக்
காலனுந் தொழுமே. [7]

செயந்தி புரத் தில்
வயந் தரும் வேற்கைப்
புயந் தனைக் கண்டு
நயம் பெற வோமே. [8]
சீரலை வா யுறை
மேரகப் பெரு மான்
தாரக மென் றிட
வோரும் பிணியே. [9]
எண்பத் தேழி னிற்
பதின் மூன் றதனிற்

திருச்செந் தூரெனி
லருட் பயன் பெறவ ருன்
னுருச் செபித் திடுபவ
ரிருட் பவ மிலரே. [10]
கடம் பணி கந்த
னடம் பயில் செந்தி
லிடம் பயில் வார்வின்
னடைந் தர சான்வரே [11]
பண்-புற-மிடபப்
பாடிய திதுவே.

---

உ

சிவமயம்.

# அலைவாயப்பெருமானிடம்

## ஆற்றுப்படைத் தூது.

செந்திற் குகப்பெருமான் சீரலைவாய் மேவினோன்
கந்தவே ளிடத்தூ தைக் காத்தருள்வாய் கணபதியே.

காவென்று காலையினிற் கடவுளரு ளேகழறிப்
பூவொன்றிப் போற்றுகின்ற புள்ளினக்கான் பூத்தருவேன்
தேவொன்றித் தினம்போற்றுந் திருச்செந்தூர்க் கந்தருக்கென்
பாவொன்றும் பாழ்மனதின் பதைபதைப்பைப் பகரீரோ. [1]

பச்சை யிளங்கிளியே பாலொடுதேன் நான்தருவேன்
செச்சை மலர்புனையுஞ் செந்திற் பெருமாற்கென்
னிச்சை யிசைத்தருளி யான்படும்பா டித்தனையும்
நிச்சயமாய்நீ யுரைத்து சேர்த்திடவே கூட்டுதியே. [2]

அடற்குருதிச் செவ்வேலி னுண்மையெலா மென்மனதி
லிடர்ப்படவே யெண்ணி யிரக்குமின்ற வெளியேற்குத்
திடர்ப்படவே திருச்செந்தூர்ச் செவ்வேட்கென் மையல்தனை
கடற்கரையி னிளங்குருகே கண்டொருகாற் கழறுவோ. [3]

ஆரணங்க ளோலமிடு மாமுருகப் பெம்மானை
யோரணங்கை யிருபுறமு மேற்றருளுஞ் செவ்வேளை
காரணங்கள் பலவற்றுங் கலந்துறையக் கழிவேற்கு
வாரணநீ கூட்டுதிமேல் வாயார வாழ்த்துவனே. [4]

தெங்காலொண் கழிசேராய் செந்தில்வளர் செவ்வேட்கென்
னங்கமெலா மெலிந்தருளி வளைகலைகள் வினைசோரப்
பங்கயப்பூங் கண்ணருவி பாய்புனலி னீரிறைப்ப
யிங்கேயா னெய்துபா மியம்புதியே விரைஞ்சவனே. [5]

நவ்விவிழி யார்நலன கனிமது வண்டினங்காள்
செவ்விதமா யேயுண்ணத் தெவிட்டாத தேன் றருவேன்
தெவ்வருரம் பிளக்குந் திகழ்வேற்கைச் செந்தூரா
னெவ்வமறச் சேரவெனை யியற்றுதியே லேத்துவனே. [6]

கைமாறு கருதாது காசினியை யூட்டுவிக்கும்
மைமாரிக் கொண்டல்காள் மனமகிழக் கடம்பமல
ரையாறு வோர்தோளி னலங்கல் தனைக் கொணர்வீரேற்
செய்மாறும் வேறுளதோ செவம்பெறநீர் வாழ்வீரே [7]

என்றுமே யிணைபிரியா தின்பமுற வாழ்கின்ற
வன்றில்காள்-பிரிவினையி-னல்லறனை-யாற்றீரோ
தென்றலார் புகுந்துலவுந் திருச்செந்தூர் கோமாற்கின்
றொன்றியாய்ப் படுந்துயர முரைப்பீரேற் குறையாமோ. [8]

மையிலங்குஞ் சோலையில்வாழ் மாமரத்தின் பூங்குயிலே
கையிலங்கும் வேற்கடவுள் கந்த னெனும்பெயரோன்
செய்யிலங்கும் பூம்பொழில்சூழ் செந்தூரில் மேவியகம்
மையன்வரக் கூவியெனக் காவியளிப்பாயே. [9]

பூவுலகில் நின்பெயராற் பூவையரைப் போற்றுகின்ற
காவலவும் பூவைநல்லாய் காரியங்க ணீமுடிப்பாய்
தேவுலவுந் திருச்செந்தூர்ச் செவ்வேட்கென் மையறனை
நீயுலவி யடியுணர்த்தி சீக்கிடவும் விளம்பாயோ. [10]

ஆதரவப் பல்பொருளாற் றொண்டன்றன் னிடர்களைய
மாதாவென் குஞ்சரிசேர் வள்ளிகண வாமுருகா
கோதாட் டொழிந்தார் குழாஞ்சூழ் செந்திற்பதியாய்
வாதாடு வேற்குன் வரமளிப்பாய் செவ்வேளே. [11]

பாராயோ வென்னையொருகாற் பன்னிரண்டு கண்ணிருந்துந்
தீராயோ வென்கவலை தீர்த்தொருகா லெனதுமொழி
சேராதோ நின்னுடைய செவிகளீ ராறதனு
ணேராயோ வேர்மாற்ற நீள்செந்திற் பெருமானே. [12]

---

## கந்தனது திருச்செந்தூர்க் காவடியின்
### காரணமும், காலமும், கருதின கருத்தும் வருமாறு:—

---

கந்தன் கருவுறறென் காண்முளையாய்த் தோற்றமுன
மெந்தைகயி லாயமவன் ஈசனருட்—சிந்தையதாய்ச்
சொற்றபடி காவடியைச் சூழ்ந்தன்போ டேசெலுத்த
நற்றவமே னுன்னருளை நல்கு [1]

நல்கு நலமெல்லா நற்சுகமு நல்வாழ்வும்
பல்லும் படியிலருட் பாபலவுஞ்—செல்வமெலா
மென்னாளும் வற்றா தேற்றமுட னுன்னடியைச்
சொன்னயமாய்ச் சூழச்செந் தூர். [2]

செந்தூர்க் கலிவிருத்தம் செவ்வேளே யாண்டருளன்
புந்தூர் தாசாங்கமுட னோர்தூற—முந்தியே
சொற்றவைக ளீண்டென் சுதன்கா வடியதனி
னற்றமரங் கேற்றினே னான். [3]

ஆண்டவனே ஆண்டவனை யாதரிப்பா யாதார
மீண்டெமக்குன் சேவடியே-யீடேறப்—பூண்டதனை
யெஞ்சிரமே லேற்க வெமதுகுடி காத்தருள்வாய்
குஞ்சரியின் வள்ளிமணைக் கோ. [4]

ஆண்டுதொண்ணூற்-றொன்பதனி லாமானி பத்தேழிற்
பூண்டதிர-யோதரியின்-பொற்றேரி-லீண்ட சிம்ம
காலமதி லென்கந்தன் சாங்கேயன் காவடியை
ஞாலமதிற் சேர்த்துவந்த நாள். [5]

---

உ

சிவமயம்.

# திருச்சதாங்கம்

---

சீராய்க் கலியிலுமே சீரோங்கச் செந்தில்வளர்
பேரேறு காட்சிப் பெறுமுதலைப் பார்மீதி
லெண்டொண்ட வேந்தனைப் பாடிடவா வைங்கரனே.
தண்டொண்ட வந்தசந் தா.

சீராசிளஞ்சிவியே செந்திற் குகவேளி
னேரார் திருநாம மேற்றுதிப்பாய்—பார்மீதிற்
கந்தன் கடம்பன் கதிர்வேலன் சாங்கேய [1]
னெந்தைபிரான் செந்தூரா னென்று

தண்டிகொண்டாய் வார்த்தைசொலிக் காவலரும் பைங்கிளியே
யண்டர்தமைக் காத்தளித்த வாயுதமென்—பண்டமுத
லக்ததா ரம்மிரிக்கு மந்தகனை மெய்நடுக்கும்
வித்தையுள்ள செந்திலன்னை வேல். [7]

பஞ்சரத்தின் பைங்கிளியே பாமணக்குஞ் செந்தூரின்
தஞ்சைத் துரைப்பறையின் தன்மையெனே—மிஞ்சவே
வான்மாக் கலைச்சூழு மாணவரோ யைக்களையும்
வான்சொற் குகவொலியின் வாழ்த்து. [8]

சேய மொழிக்கிளியே நித்தியமாய்ச் செந்தூரின்
மேய சமதுரையின் மெய்த்தாரென்—தீவவினை
போயகலப் பூவுலகின் பூங்கடம்புஞ் செச்சையுமே
யேயவுயிர் போற்றுமென வேத்து. [9]

வேலைசூழ் வையம் விரும்பு மடக்கிளியே
சோலைசூழ் செந்தூரான் தொல்கொடியென்—காலையினி
லண்டம் வெடிபடவே யார்த்தெத் திசைச்சிறகர்
கொண்டகற்றம் வன்குக் குடம். [10]



உ

சிவமயம்.

# ஆண்டருட்பத்து.

---

தண்மலரா மென்னுட் டடமா கரம்புனலென்
னுண்மலரு மன்பாசல் லூழ்கினங்காம்—வண்மையருள்
மூர்த்தி விநாயகவின் மொய்கொடியாங் கீர்த்திசெல்வச்
சந்தி விநாயகனற் றாள்.

பூவினி லேவந்து பூதரம் பிளந்திடும் புயனே குகனே தயனே
போற்றிடு மடியவர் பவதுயர் களைந்திடும் போதா கிய பாதா
காவினில் வைகிடுங் கடவுள ருரைசிவ காமி தந்த சாமி
கண்டவர் காதலித் தேமிக வேத்திடுங் கற்பே யுப ரற்பே
சேவினி தாகவூர் கோவருள் சேயான தேவே எனை யாவே
தேடித்தி ரிந்துனைப் பாடிடு மடியவர் சிரமே விய பரமே
தாவிடு மயின்மிசை யேவரு ஞானபோ தகனே யற முகனே
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணெ னையாண் டருளே.

கண்ணுத லினிலறு கனலுரு வாய்வரு கந்தா சய சந்தா
கரிமுக வொருதனி முதலினை யவபிர காசா வள்ளி நேசா
எண்ணு மெழுத்துமு னகத்தியர்க் கோதிய இறைவா வருட்டுறை
வத்திடு மடியவர் பூத்திட வேயருள் இனிதா யுறுபுனிதா [வா
மண்ணுல கதனிடை மாதவர் புரிதவ வாதா திரு நாதா
மறைமுடி யினிலுல வியபத ளினனிர் மயனே மனோ மறனே
தண்ணுறு பொய்கையிற் குரவைப் பாலுணர் தரனே பரி புரனே,
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணெ னையாண் டருளே.

சாத்துப்பா மாலைகள் யாத்தணி வோருளச் சதமே யுயர் சிதமே
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணே னையாண் டருளே.

வானவ ரிடுக்கணை வாட்டிட வந்திடு மாலா தர வேலா
வாரியில் வருசூர் மாவதைப் படக்காய் வலனே ஒரு விலனே
கானவர் குலத்தினிற் றோன்றிய பிடிபுணர் கயமே சிவ மயமே
காற்றினைச் சாரதி யாக்கியி ரதமுற கனலே யருட் புனலே
மோனையெ துணைபொருள் சேரினி தருதமிழ் மூலா வனு கூலா
மூதறி வாளருக் காதர மாய்வரு முதல்வா வுமை புதல்வா
தானவ விருளறு பானுவின் மேவிய தகவா வறு முகவா
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணே னையாண் டருளே.

ஐயமு றுதையம் பெய்குநர் மைதீ ரகமே நிறை சுகமே
அரவிய ஞருமை யாவெனு மாநியி னணியே தரு மணியே
செய்யவ டிவதுதி செய்யவ டிவளரி தியமே யருணயமே
செல்வன வனைவை செல்வன வனைவை தெரிவீ ரெனும் பரிவீர்
தொய்யவர் மைபோக் குகவெனி னின்புகழ் சோக்கா வுறு மாக்கா
நுண்ணுணர் வாரியர் பண்ணுவல் தாள்களை னுந்தா மரையிந்தா,
சைவவெ ணீறணி வென்றரு ளும்பர சபிலா கதி ரயிலாய்
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணே னையாண் டருளே,

செந்தில கந்தனி வந்தரு டங்கிய சீரா வதி காரா
தேவசே னதிப னுயிய மேதகு திட்பா மிகு நட்பா
கந்தசு கந்தமு கந்தவ கந்தழை காளாய் உயர் தோளாய்
கானவ ரங்கமர் கானவ ரங்களை களியா னமார் வலியா

மந்திர தந்திர மாதவர் ஓதரும் வரதா மயி லிரதா
வாமித வாமித வாமிய வாமினிர் வண்ணா முனால் கண்ணா
சந்திர சந்திகழ் சந்தா ரந்தமிழ் தனவா மலார் பணவா
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணெனை யாண்டருளே,

திருவா வினன்குடி திருப்பரங் குன்றந் திருவே ரகந் தருவேய்
திரிசோலைவாய் குன்றதோ ருடலா டியவா றுப டையவா
இருவே றுலகப் பொற்பணி யின்பர வேய்வா யரு டோங்காய்
இரும்பூ தகலா மனகளி னத்தாய் என்றே நினை யென்றேன்
ஒருபோ தருமை மறவா தபடிக் குற்றே புரி புற்றே
ஒருவன டைப்பயில் வுள்ளாய் ஒருவனை யுரகங் கவர் தாரகம்
தாவின டங்கிய யங்கதி வந்தனை தகவா வறு முகவா
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணெனை யாண்டருளே

சிமிழினை யிருகய லொருமதி யிருசிலை திகழும் படி திகழுந்
திரளொரு குடமயி லையினுத லிடவுரு திருநீற தரு நீ [தே
அமிழ்தினு மினிமையெ மிடர்செற கெனினரு ளாதே தளதோ
அறுமுக குருபர முருகரு ழகதவத் தருந்தே டரு மருந்தே
இமிழ்திரை புவரியின் மரவடி வசுரனை யெற்றி யடை வெற்றி
விமைபனி ருபுயப னிருவிழி கனிலெனை எராய் கனி பாராய்
தமிழ்மது ரகவிப கருமுனர் வினர்டனக் தனதா வளர் மனதா
சரவண பவகுக பிரணவ சிவகுரு சரணெனை யாண்டருளே.

அருமறை முடியினி னடமிடு பதமல ரானே முரு கோனே
ஆற்றிடு மேழுமேனை விசைத்தகி னருமை மிகு பெருமை

இருணிற வசுரரை யட்டிம யவர்துயர் இரியும் படி புரியும்
ஈடுமெ டுப்புமொ ருவரையு மோதிட வேலா மையு மேலாப
உருவமு மயிலுமெ யிலுமிரு தலைவிய ருஞ்சேர் தா விஞ்சேர்
ஊதிய மானந் தீசனமு ளிப்பதென் றுலகா தா திலகா
எருதுறு வாகன பசுபதி சுதபுவி எழூர் தினம் வாழும்
எருற வருள்பிர ணவசிவ குருசா ரணிமெ லையாண் டருளே.



# சனியனுகாதேகச்சாற்றியது

*சனிக்கச் செயுஞ்சனியும் சாரா தினிதேகந்*
*தனிக்குஞ் சராவருளைத் தா*

[illegible]க முறுஞ் சனியே!
[illegible]கனஞ் செய் வாயே
உன்கோ னருளெனக் கும்
இங்கேத மாயுள வே. (1)

செல்ல லுறுஞ் சனியே!
அல்ல வினிப் புரியேல்
எல்லை யிலாக் குகனின்
வெல்வே லெனக்குளவே. (2)

கரிய நிறச் சனியே
உரிய பொருள் மறையாய்
அரிய மறை யேத்தும்
பெரிய தோர் வேலுளவே (3)

மந்த னெனும் பெயரோய்
எந்த னிடமனு காய்
கந்த னெனுங் கடவுள்
சொந்தவை வே லுளவே. (4)

சென்மத் துறு சனியே
வன்மத் தினை யொழிக்கு
கன்மத் தினை யொழிக்கும்
தன்மத் துணை யுளவே. (5)

வாக்கில் வருஞ் சனியே
ஆக்கந் தனை யருளே
தாக்கா துறு குகனின்
மீக்கோ னெனக் குளவே (6)

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்,



யாழ்ப்பாணம் சிதம்பரசுவாமிகளா லருளிச்செய்யப்பெற்றது.

சீரலைவாய்ச் சேய்சீரைச் செய்தான் றுதிசிவனைச்
சீரலைவாய் மெய்ம்மனத்தாற் செய்திடுவான்—சீரலைவாய்
செப்பறைவாய் செல்லைவாய் சேர்சுப் பிரமணியன்
செப்பறைவாய் வாணன் செயல்.

---

இராமநாதபுரம் மகாவித்துவான் முகவூர் திருவாளர்
திருநாம்பெருமாளப்பக்காரவர்களாலியற்றப்பெற்றது.

தேனு மமுதம்பாகுந் தீங்கனிக ளின்பிழிவு
மானு மமுதத்தமிழ் மாண்பெல்லாந்—தானுரித்தாக்
கொண்ட பனுவற் குழாமாற்கும் பற்கயிலோற்
கண்டுசுப்ர மணியனிட்டா னூல்.

1924

